# ஊர் சுற்றி நடைராஜன்



"இளி ஜோசியம் பார்க்கணுமா? எலி ஜோசியம் பார்க்கணுமா?" என்று கேட்டார் அந்த மாட வீதி—நடைபாதை—ஜோசியர்.

"எலி ஜோசியமா?" என்று ஆச்சரியப்பட்டு அவரு டைய கிளிக் கூண்டைப் பார்த்தேன். ஆமாம். ஓர் எலியும் குறுகுறுவென்று ஓடிக் கொண்டிருந்தது.

"எலி ஜோசியமே பார்க்கிறேன்," என்று நான் சொன்னதும் கூண்டைத் திறந்துவிட்டார் சோதிடர். தலை தப்பியது தம்பிரான் புண் ணியம் என்று அந்த எலி ஓட்டம் பிடிக்கவில்லை. சமர்த்தாக ஒரு சீட்டை எடுத்துக் கொடுத்துவிட்டு மறுபடி கூண்டுக்குள்ளேயே புகுந்துகொண்டு விட்டது.

வழக்கம்போல் பத்துப் பைசா கொடுத்தேன். "மன்னிக்கணும். கிளிக்குத்தான் பத்துப் பைசா. எலிக்குப் பதினைந்து பைசா," என்றார் ஜோசியர்.

பட்டதாரிகள் மன்றத்தில் ஒரு 'டின்னர் மீட்டிங்'கில் கூட்டத்தினரின் கேள்விக்குப் பதில் சொல்லிக்கொண்டிருந்தார் 'சோ'.

என்ன கேட்கலாம் என்று நான் தலையைச் சொறிந்துகொண்டிருந்த சமயம், பக்கத்திலிருந்த ஒரு நண்பர் பளிச்சென்று கேட்டார்:

"உங்களைத் தினம்காலை பதினொரு மணிக்கு மயிலாப்பூர் சித்திரை குளத் தெருவில் பார்க்கிறேனே, அதன் மர்மம் என்ன?"

சோவின் பதிலும் தயங்காமல் வந்தது: "மர்மம் எதுவுமில்லை. அங்கே ஒரு படத் தயாரிப்பாளர் இருக்கிறார். அவரைப் பார்ப்பதற்காகப் போவேன். சித்திரக் குளத் தெருவில் என்ன, குளத்தின் நடுவிலேயே அவர் இருந்தால்கூடப் போய்ப் பார்க்கத்தான் பார்ப்பேன்."

"எனக்குத் திடீர் திடீரென்று சிறு நீர்ப் பையில் வலி வந்துவிடும். துடித்துப் போய்விடுவேன்," என்று தொடக்கத்திலேயே தெரிவித்துவிட்டுத்தான் பெரியார் தமது பேச்சைத் துவங்கினார், மாநிலக் கல்லூரியின் தமிழ் மன்றத்தில். அதற்கேற்ப, உட்கார்ந்தவாறேதான் சொற்பொழிவை நிகழ்த்தினார்.

ஆனால் விழா முடிவின்போது தேசிய கீதம் பாடப்பட்டதும் அவரால் உட்கார்ந்திருக்க இயலவில்லை. தட்டித் தடுமாறி எழுந்து நின்று கொண்டார். அவர் படுகிற வேதனை எப்படிப் பட்டது என்பதை அவர் பல்லைக் கடித்துக்கொண்டு நின்ற முறையிலேயிருந்து தெரிந்து கொண்டேன்.



# டாக்டர் 'லக்ஷ்மி'

இன்று போல் இருக்கிறது என் குழந்தைப் பருவத்து அந்த நினைவு.

அப்போது கிராமத்தில் பாட்டனார் வீட்டில் செல்லமாக வளர்ந்து கொண்டிருந்தேன். கிராமத்து வாய்க்கால் கரைக்கு நாங்கள் விளையாடப் போவதுண்டு. அந்த வாய்க்கால்மீது ஒரு பாலம் இருந்தது. அதைத் தொடர்ந்து சென்றது மயான பூமிக்குப் போகும் பாதை. எனவே கிராமத்துப் பிணங்கள் பூராவும் அந்தப் பாலத்தின் வழியேதான் போகவேண்டியிருந்தது.

எங்களுடன் கூடத் துணைக்குச் சில சமயம் வீட்டு வேலைக்காரி காளி வருவது வழக்கம். பாலத்தின் அருகே பிண ஊர்வலத்தை அவள் கண்டுவிட்டால்போதும். உடனே எங்களைப் பார்த்து அலறத் தொடங்கிவிடுவாள். ''குட்டிகளா, பொணம் வருது! தொப்புளை மூடிக்கோங்க. அந்தப் பக்கம் பார்க்காதீங்க. ஊட்டுக்கு ஓடுங்க!'' என்று அவள் கூச்சலிடுவதைக் கேட்டதும் நாங்கள் நடுநடுங்கிப் போய்விடுவோம்.








இறந்தவர் ஆவி தொப்புள் வழியே உடலுக்குள் புகுந்து விடப் போகிறது என்ற பயத்தில் ஒரே ஓட்டமாக வீட்டிற்கு ஓடிவிடுவோம். அப்போது எதைக் கண்டு அலறி அடித்துக்கொண்டு ஓடினேனோ அதைப் பின்னர் நெருங்கிய நிலையில் பார்க்க வேண்டிய சந்தர்ப்பம் வரும் என நான் கனவிலும் கருதவில்லை.

வைத்தியக் கல்லூரியில் முதல் வருட மாணவியாக உடற்கூறு சாத்திரம் (anatomy) பயில அனுடமி ஹாலுக்குள் நுழைந்தேன். என்னையுமறியாது என் உடல் சிலிர்த்தது. மருந்துகளால் பதப் படுத்தப் பட்ட பல பிணங்கள் ஆங்காங்கே மேஜையின் மீது கிடத்தப் பட்டிருந்தன. உடலின் ஒவ்வொரு பகுதிக்கும் இரண்டு மாணவர்கள் என்ற கணக்குப் படி மேஜைகளைச் சுற்றிலும் பல ஆசனங்கள் கிடந்தன.

மாணவர் ஒருத்தர் அனுடமி புத்தகத்தைத் திறந்து உரத்த குரலில் குறிப்பிட்ட பகுதியைப் படிக்க வேண்டும். இன்னொரு மாணவர் சிறு கத்தியினால் புத்தகத்தில் கூறியுள்ள முறைப்படி உடலை அறுத்துக்கொண்டு போக்கவேண்டும். பின்னர் இருவரும் சேர்ந்து புத்தகத்தில் கூறியபடி நரம்புகளும் இரத்தக் குழல்களும் அந்தப் பாகத்தில் உள்ளனவா என்பதைப் பார்த்து தெரிந்து கொள்ள வேண்டும். இப்படியாக உடல் முழுவதையும் அறுத்துப் சோதித்துப்பயிலுவதற்கு இரண்டு ஆண்டுகள் ஆகின்றன. அதற்குப் பின்னர்தான் அனுடமி பரீட்சைக்கு உட்கார முடியும்.

அன்று எனக்குக் கொடுக்கப்பட்டிருந்த உடலின் கால் அருகே வந்து உட்கார்ந்து கொண்டேன். என் தோழி புத்த... க எடுத்து உற்சாகமாக வாசிக்கத் தொடங்கினள்;

கத்தியைக் கையில் எடுத்தேன். விரல்கள் நடுங்கின. வயிற்றைக் குமட்டியது. விவரிக்க முடியாத ஒரு உணர்ச்சி என்னை ஆட்டிப் படைக்கவே கத்தியை விட்டெறிந்து விட்டு ஓடி விடலாமா என்று தவித்தேன். இங்குமங்கும் பார்த்து விட்டு ஹாலின் வாயிற் பக்கம் மெல்லத் திரும்பினேன். இடுப்பின் மீது கைகளைத் தாங்கிக் கொண்டு வழியை மறைத்த வண்ணம் மலைபோல் நின்றுகொண்டிருந்தார் எங்கள் அனுடமி புரொபஸர்!

'வேலையைக் கவனிக்காமல் என்ன பராக்குப் பார்க்கிறாய்?' என்று பேசாமல் பேசியது அவரது முகத்தின் கடுமை. மூக்குக் கண்ணாடி வழியே கனலைக் கொட்டிய அவரது கண்களைப் பார்க்க பயந்து, கண் மூடிக் கிடந்த பிணத்தின் பக்கம் திரும்பினேன். வேறு வகையின்றி கத்தியைக் கையில் மீண்டும் எடுத்துக் கொண்டேன். நெஞ்சு பட படக்க, கைகள் உதற மெல்ல அந்த உடலை அறுக்கத் தொடங்கினேன்!

வசதி மிக்க மாணவர்கள் வைத்திய புத்தகங்கள் பலவற்றையும் சொந்தத்திலே விலை கொடுத்து வாங்கிக் கொள்வார்கள். அதுபோல் அனுடமியை நேர்முகமாகப் படிக்க மாணவர்கள் உடல் எலும்புகள் அனைத்தையும் விலைக்கு வாங்கிக் கொள்வதுமுண்டு.

**'லக்ஷ்மி!' சுவைசெறிந்த கற்பனைகளினால் எத்தனை உள்ளங்களைக் கொள்ளை கொண்ட நாவலாசிரியை! அந்தப் புனை பெயருக்குள் ஒளிந்துள்ள டாக்டர் திரிபுரசுந்தரி** (தற்சமயம் அவர் இருப்பது, தென் ஆப்பிரிக்காவில்) **மருத்துவம் சம்பந்தப்பட்ட தம் அனுபவங்களை இங்கே விவரித்திருக்கிறார்.**



றல் என்ன? பிணத்தை அறுக்கத்தானே சொன்னுர்கள்? அதைச் சாப்பிடச் சொல்ல வில்லையே! ஸில்லி கேர்ல்! கோ அண் ஸ்லீப் ஓவர் இட்!'' என்று அதட்டி விட்டு மறுபடி புத்தகத்தின் மீது அவள் சாய்ந்து கொண்டாள்.

அன்றிரவு ஹாஸ்டலில் எனக்குத் தூக்கம் வரவில்லை. என் ரூம் மேட், புதிதாகத் தான் வாங்கியிருந்த அனடமி புத்தகத்தின் மீது தலையை வைத்துக் கொண்டு (வைத்தியப் புத்தகங்கள் பல தலையணை உயரத்திற்கு கனமாக இருக்கின்றன) நித்திரையில் ஆழ்ந்து போயிருந்தாள். அனடமியைக் கரைத்துக் குடித்துவிட வேண்டும் என்று ஆவலுடன் அவள் வாங்கியிருந்த எலும்புக் குவியல் மேஜை மீது பரத்திக் கிடந்தன. முக்கியமாக அதிலிருந்த மண்டை யோட்டின் வெறித்த பார்வை இரவின் அந்த வேளையில் என்னை என்னவோ செய்தது.

''கௌசி! எழுந்திரு! சீக்கிரம்!'' என்று ரூம்மேட்டை உலுக்கி எழுப்பினேன்.

''எந்தா இது!'' என்று சலித்துக் கொண்டாள் அந்தக் கேரள மங்கை.

''எனக்குப் பயமாக இருக்கிறது கௌசி! நான் நாளைக்கு ஊருக்குப் போகப் போகிறேன். டாக்டர் படிப்பு எனக்குப் பிடிக்கவில்லை,'' என்று படபடத்தேன் நான்.

''ஓய்!'' என்று கொட்டாவி விட்டாள் அவள்.

''பிணங்களைத் தொடவும், அறுக்கவும் எனக்குப் பிடிக்கவில்லை. நான் ஒரு வெஜிடேரியன். அதனுல் ரொம்ப அருவருப்பாக இருக்கிறது,'' என்றேன் நான் விடாப்பிடியாக.

தூக்கத்தின் நடுவே இதென்ன தொணதொணப்பு என்று அவளுக்கு ஒரே எரிச்சல். கண்களைக் கசக்கிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். ''என்ன பயம்? இறந்தவர்கள் சடலம் நம்மை என்ன செய்ய முடியும்? வெஜிடேரியன் என்

மருத்துவக் கல்லூரிப் படிப்பு பிடிக்கவில்லை என்று என் பயத்தை விளக்கி என் தந்தைக்கு மறுநாள் ஒரு கடிதம் எழுதிப் போட்டேன். அவரும் ஒரு வைத்தியர். ''கல்லூரியில் இடம் கிடைக்க எத்தனை பாடு பட்டோம்? படிப்பை விடப் போகிருயா? இடியட்!'' என்று அவரிடமிருந்து பதில் சீறியது.

நீ எந்த வியாதியைப் பற்றிப்
படிக்கிருயோ அந்த வியாதியாக
நீ ஆகிருய்.

மூன்ருவது வருஷப் படிப்பு வைத்தியக் கல்லூரி மாணவர்களின் வாழ்க்கையில் ஒரு முக்கியமான திருப்பம். இரண்டு வருஷ காலம் பிணங்களைத் தொட்டுக் கற்றுக் கொண்டிருந்த மாணவர்கள் மூன்ருவது வருஷத்திலிருந்து உயிருள்ள நோயாளிகளின் உடலைத் தொட்டுப் பார்த்து சிகிச்சைக் கலையைப் பயிலத் தொடங்குகின்றனர்.

காலை நேரம் முழுவதும் நோயாளிகளின் உடல் நிலையைப் பரிசோதித்துப் பலவும் கற்றுச் கொள்ள ஆசிரியருடன் வார்டுகளை சுற்றியலைந்தோம். பகல் முழுவதும் பற்பல நோய்களைப் பற்றி ஆசிரியர்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகளுக்குச் செவி மடுத்தோம். இரவின் முற்பகுதி முழுவதும் புத்தகங்களைப் புரட்டி நோய்களைப் பற்றி ஊன்றிப் படித்தோம். இதன் விளைவு?

தலைவலியைப் பற்றிப் படித்த பொழுது எங்களுக்கும் தலைவலி வந்தது. அப்பெண்டிசைடிசைப் பற்றிப் படித்த பொழுது அநேக மாணவர்களுக்கு வயிற்று வலி தொடங்கி விட்டது! சரும வியாதிகளைப் பற்றி படிக்கும் பொழுது உடம்பெல்லாம் அரிக்கத் தொடங்கியது. குடல் நோய்களைப் பற்றி படித்துவந்து கொண்டிருந்த என் சிநேகிதி ஒருத்தி, (இப்போது பிரபல வைத்தியராக விளங்கு

கிறார்) "ஐயோ! என் கிட்னி வலிக்கிறதே!" என்று அலறினள். ஜுரங்கள் எனும் பகுதியைப் படித்துக் கொண்டிருந்த என் ரூம் மேட் ஒருத்தி நொடிக்கு நொடி தர்மாமீட்டரை வாயில் வைத்துக் கொண்டு தன் உடல் உஷ்ணநிலையை அளந்து கொண்டிருந்தாள். இருதய நோய்கள் பற்றி ஆராய்ந்து கொண்டிருந்த எனக்கோ நெஞ்சு வலி வந்து விட்டது.

அப்போது எங்களுக்குப் போதனு ஆசிரியராக இருந்த வைத்தியர் மிகவும் பிரபலமானவர். அவரது வைத்திய அறிவும், பேச்சுத் திறமையும் கம்பீரமான தோற்றமும் பல மாணவர்களை அவர் பக்கம் கவர்ந்து கொண்டிருந்தவ. நானும் என் சிநேகிதியும் எங்கள் உடலை வருத்திய நோய்களைப் பற்றி அவரிடம் கலந்து ஆலோசிக்கத் திர்மானித்தோம். ஒரு நாள் அவரைக் காணச் சென்றோம். இருவரையும் நன்கு பரிசோதித்து விட்டு அவர் தமக்குள்ளே லேசாகச் சிரித்துக் கொண்டார்.

"எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டார்.

"மயிலாப்பூரிலிருந்து," என்று ஏக காலத்தில் பதிலளித்தோம்.

"கல்லூரிக்கு எப்படி வருகிறீர்கள்?"

"டிராம் வண்டியில்."

"அப்படியானுல் பிராட்வே திருப்பத்தில் மண்ணடி முனையில் ஒரு பெரிய கரும்பலகை தொங்கிக் கொண்டிருக்கும். பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டார்.

இருவரும் பதிலுக்கு விழித்தோம்.

"நாளைக்கு வரும் பொழுது கட்டாயம் பாருங்கள். அந்தப் பலகையில் கொட்டை எழுத்தில் என்ன எழுதப் பட்டிருக்கிறது தெரியுமா? 'இவ்விடம் பேய் பிசாசு பில்லி சூனியம் முதலியவைகளுக்கு மந்திரிக்கப் படும். பேய், சாத்தான், காற்று, கருப்பு தோஷங்களுக்கு மந்திரக் கயிறு கிடைக்கும், என்று எழுதியிருக்கிறதைப் பார்ப்பீர்கள். அங்கே போய்க் கொஞ்சம் விபூதி மந்திரித்து வாங்கிப் பூசிக் கொள்ளுங்கள். உங்களைப் பிடித்திருக்கிறது வைத்தியப் புத்தகத்தில் காண முடியாத நோய். இதற்கு 'ஸ்டுடன்டைடிஸ்' (மாணவர்களின் நோய்) என்று பெயர். மூன்ருவது வருஷ மாணவரிடையே இது காணப்படுவது ரொம்ப சகஜம். இது உடல் நோய் அல்ல. உள்ளத்தைப் பற்றிய பயம். இதற்கு மருந்து மந்திரித்த விபூதிதான்!" என்ருர் பரிகாசமாகச் சிரித்துக் கொண்டு. அசடு வழிய வெளியே வந்தோம். அதற்குப் பின்னர் சாதாரண ஜலதோஷம் கூட எங்களை அண்டியதில்லை.

நானும் மேலே சொன்ன மயிலாப்பூர் தோழியும் கல்லூரி நாட்களில் இணைபிரியாத நண்பர்களாக இருந்தோம். இருவருக்கும் சற்றுக் குழைந்த மனது. ஒரு வழியில் கோழைகள் என்றே தான் குறிப்பிட வேண்டும். ஒரு சமயம் நாங்கள் இருவரும் கல்லூரி மேல் மாடியிலிருந்த நூல் நிலையத்தில் பரீட்சைக்காகப் படித்துக் கொண்டிருந்தோம். அந்தத் தனி அறையில் நாங்கள் இருவர் மட்டும் தான் இருந்தோம். திடீரென்று கீழே பலர் அழும் குரல் கேட்டது. ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தோம். கீழேயிருந்த பிணக்கிடங்கிலிருந்து தங்கள் உறவினரது பிணத்தை அடையாளம் கண்டு பெற்றுப் போக வந்த சொந்தக்காரர்கள் எழுப்பிய ஓலம் அது எனப் புரிந்தது.

தயாராகக் காத்திருந்த குதிரை வண்டிக்குள் துணியால் மூடப்பட்ட சடலம் கிடத்தப்பட்டது. மார்பில் அடித்துக் கொண்டு பெற்ற தாய் அலறினள். கூட வந்தவர்கள் அத்துடன் கூடச் சேர்ந்து கூக்குரலிட்டு அழுதனர். இந்தக் காட்சி எங்கள் உள்ளத்தை உலுக்கி விட்டது.

ஜன்னலிலிருந்து திரும்பிய நாங்கள் இருவரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டோம். அடுத்த நிமிஷம் எங்களை அறியாது உணர்ச்சி வேகத்தில் ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டு ஓவென்று அழத் தொடங்கி விட்டோம்.

துன்பத்தைக் கண்டு தளராத நெஞ்சுறுதி வைத்தியருக்குத் தேவை.

**வைத்திய**
**மாணவர்களுக்கு**
**வரும் முக்கிய நோய்;**
**'ஸ்டுடன்டைடிஸ்!'**
**அதாவது பயம்!**



பெயர்:

முதன் முதலாக எனக்குத் தியேட்டரில் உதவி செய்யும் வாய்ப்புக் கிடைத்தவுடன் பெருமை பிடிபடவில்லை. தலையில் தொப்பியும், முகத்தில் மாஸ்க்கும், கைகளில் கையுறையும், உடலின் மீது சர்ஜனின் கவுனும் தரித்துக் கொண்டு பெருமையாக உள்ளே நுழைந்தேன்.

அப்போதுதான் அவர் தமது கடமைகளைத் திறமையுடன் செய்ய முடியும். அப்படியிருக்கையில் நாங்கள் கோழைகளாகி யாருக்காகவோ அழுதோம் என்பதைச் சொல்லிக் கொள்ள வெட்கப் பட்டோம். இந்தச் சம்பவத்தை என் தோழி மறந்திருக்கக் கூடும். ஆனால் நான் மறக்கவில்லை.

மாணவர்களாக இருக்கையிலேயே வைத்தியர்களுக்கு அறுவை சிகிச்சையில் பயிற்சியளிக்கப் படுகிறது. கடைசி வருஷப் படிப்பின் போது ஆபரேஷன் தியேட்டருக்குள் உதவி செய்ய மாணவர்களை அனுமதிப்பது வழக்கம்.

சாதாரணமாக ஆபரேஷன் செய்ய வேண்டிய பகுதியைத் தவிர நோயாளியின் உடல் முழுவதும் பரிசுத்தப் படுத்திய துணியால் மூடப் பட்டிருக்கும். மேஜையைச் சுற்றிலும் சர்ஜனும் அவரது உதவி டாக்டரும் தியேட்டர் நர்ஸும் அவரது சகாக்களும் கூடி நிற்பார்கள்.

'மாப்! மாப்!' என்று கூவினார் சர்ஜன்; என் கை கால் நடுங்கியது.

இவர்களைச் சுற்றி ஆபரேஷனைப் பார்த்துப் பயில வந்துள்ள மாணவர்கள் கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு நிற்கும். இதற்கு இடையில் கூட்டத்திற்குள் புகுந்தடித்துக் கொண்டு உதவ வேண்டும் மாணவன், ஆபரேஷன் போது.

அப்படி ஒன்றும் பிரமாதமான உதவியை அவனிடமிருந்து சர்ஜன் எதிர்பார்த்து விடுவதில்லை. குறிப்பிட்ட பகுதியை அவர் கத்தியால் கிழிப்பார். பெருகும் ரத்தத்தை ஒரு கிடுக்கியின் உதவியால் பஞ்சினால் துடைக்க வேண்டும். இதற்கு மாப்பிங் என்று

அன்று ஒரு பெரிய ஆபரேஷன் நடக்க விருந்தது. உள்ளே எக்கச்சக்கமான கூட்டம். போதாததற்கு, ஆரம்பத்திலிருந்து சர்ஜனின் மூட் அன்று சரியாக இல்லை. (சினிமா நட்சத்திரங்கள் போன்று சில சர்ஜன்களுக்கும் மூட் பலவிதமாக மாறுவதுண்டு!) கத்தியின் கூர்மையில் திருப்தியடையாது அவர் கோபத்துடன், "நர்ஸ்! டேக் திஸ் பிளடி திங்!" என்று கர்ஜித்தார். விர் எனப் பறந்து கத்தி தரை மீது விழுந்தது.

நர்ஸ் –மட மட வென்று வேறு ஒரு நகரும் மேஜையை அருகில் இழுத்தாள். அதில் பரப்பி வைத்திருந்த ஆயுதங்களிலிருந்து வேறு ஒரு கத்தியை எடுத்து அவரிடம் நீட்டினாள்.

கோபம் தணியாத சர்ஜன் என்னவோ முணு முணுத்தார். பல்லைக் கடித்தார். உதவி டாக்டர்கள், மாணவர் சகலரும் பயந்து விட்டார்கள். என் உற்சாகம் இருந்த இடம் தெரியாது பறந்து விட்டது.

எனக்கு ஒரு பக்கத்தில் பூதம் போல் மிக்க பருமனான ஒரு உதவி டாக்டர் ஆபரேஷனின் பெரும் பகுதியை மறைத்துக் கொண்டு நின்றார். இன்னொரு பக்கம் தியேட்டர் நர்ஸ் நெருக்கிக் கொண்டு நின்றாள். இருவருக்கும் இடையில் இருந்த இடுக்கில் தலையை நுழைத்துக் கொண்டு மூச்சுத் திணற நின்றேன் நான்.

கிடுக்கியைப் பிடித்திருந்த என் கரம் வெட வெட வென்று நடுங்

கிக் கொண்டிருந்தது. குனிவதும், நிமிர்வதும், உறுமுவதுமாக இருந்தார் சர்ஜன். என்ன நடக்கிறது என்று எனக்கு எட்டிப் பார்க்கக் கூட முடியவில்லை.

''மாப்! மாப்!'' (ரத்தத்தைத் துடை) என்று திடீரென்று கத்தினார்.

''கமான் ஸ்டூடண்ட்!''என்று தியேட்டர் நர்ஸ் என் விலாவில் குத்தி என் வேலையை எனக்கு நினைவூட்டினாள். என்ன செய்கிறோம் எனப் புரியாது இடுக்கியை இப்படியும் அப்படியுமாகப் புரட்டினேன் நான்.

''ஹெல்!'' என்று இரைந்தார் சர்ஜன். முகமூடிக்குள்ளிருந்து அவரது கண்கள் கத்திகளாக என்னை வெட்டின. ''வாட் இஸ் த பிளடி திங் யூ ஆர் டூயிங்?'' என்று என்னை நோக்கிக் கர்ஜித்தார். மேலும் என் கரங்கள் வேகமாக நடுங்கத் தொடங்கவே கிடுக்கியைக் கீழே தவறிப் போட்டு விட்டேன்.

''வாட் இஸ் ராங் வித் யூ!'' என்று மேலே இரைந்தார் அவர். எந்த நிமிஷமும் வாய்விட்டு ஓவென்று அழுது விடுவேன் போன்று திணறிக் கொண்டு நின்றேன்.

## ரத்தக் கண்ணீர் சிந்தி பாடம் கற்றேன்

சர்ஜன் மேலும் என்னைக் கோபமாக முறைத்தார். ''நோ நான் ஸென்ஸ் ஹியர்!'' என்று மறுபடி கத்தி விட்டுத் தமது வேலையில் ஈடுபட்டார்.

தியேட்டர் நர்ஸ் என் விலாவில் மறுபடியும் இடித்தாள். ''அவர் அப்படித்தான். காரியத்தைக் கவனி!'' என்றாள் காதருகில், ரகசியமாக. பின்னர் வேறு ஒரு கிடுக்கியைக் கையில் எடுத்துக் கொடுத்தாள். கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொண்டு சர்ஜன் 'மாப்' என்று கத்தியபோதெல்லாம் நான் மாப் செய்யத் தொடங்கினேன்!

ஆபரேஷன் முடிந்ததும் கைகளைக் கழுவிக் கொண்டு நல்ல மூடில் சர்ஜன் தியேட்டருக்கு அருகே உலவிக் கொண்டிருந்தார். வராந்தா வழியே வெளியேறிய என்னைக் கண்டதும் ''கம் ஹியர்!'' என்று கூப்பிட்டார். ''நீ பெரிய சர்ஜனாகப் பிரியப் படுகிறாயா?'' என்று கனிவான குரலில் கேட்டார்.

பதில் கூறாது மௌனமாக நின்றேன்..

''நல்ல சர்ஜனாவதற்கு ரொம்ப உழைப்புத் தேவை. அத்துடன் எதைக் கண்டும் அசைந்து கொடுக்காத மன உறுதியும் தேவை. தொட்டால் சிணுங்கும் அசட்டுக் குணத்தை வீட்டில் மூட்டை கட்டிவைத்து விட்டு இங்கே கருமமே கண்ணாக இருந்தால் தான் முன்னேற முடியும். தெரிகிறதா?'' என்று உபதேசித்தார். ஆபரேஷன்போது கனல் பறந்த அந்த முகத்தில் இப்போது சிரிப்பு நிழலாடியது.

'தெரிகிறது' என்று தலையாட்டினேன் நான். அதற்குப் பின்னர் ஆபரேஷன்களில் உதவி செய்யப் பல சந்தர்ப்பங்கள் எனக்குக் கிட்டின. தலைவர் செய்த உபதேசத்தை நான் மறக்கவேயில்லை. கருமமே கண்ணாக இருந்தேன்.

## ஆஸ்பத்திரி வார்டு மல்லிகைத் தோட்டம் ஆவது எப்போது?

இறுதிப் பரீட்சை முடிந்து வைத்தியர் பட்டம் கிட்டியதும் ஹவுஸ் சர்ஜன் என்ற நிலையில் ஒரு வருஷ காலம் அரசாங்க ஆஸ்பத்திரியில் பயிற்சி பெற வேண்டும். ஹவுஸ் சர்ஜன் என்ற நிலையில் முதலில் என்னை அறுவை சிகிச்சைப் பகுதிக்குப் பயிற்சிக்கு அனுப்பியிருந்தார்கள். அப் பகுதியின் தலைவரின் பொறுப்பில் பல வார்டுகள் இருந்தன.

தலைவர் தினசரி தமது வார்டுகளைச் சுற்றிப் பார்க்கக் கிளம்புவார். அவர் பின்னால் உதவி டாக்டர்கள் நடப்பார்கள். அவர்களுக்குப் பின்னால் தலைவர் கூறும் சிகிச்சை முறைகளை அவ்வப்போது நோட்டுப் புத்தகத்தில் குறித்துக் கொண்டு பின் தொடர்ந்து செல்வார்கள் ஹவுஸ் சர்ஜன்கள்.

எல்லோருக்கும் பின்னால் வார்டின் நர்ஸ் ஒரு பீங்கானில் மருந்து நீரும், கை துடைக்கத் துவாலையும் தூக்கிக் கொண்டு விரைந்து வந்து கொண்டிருப்பாள். இப்படித் தினசரி ஒரு ஊர்கோலம் வார்டுகளில் நடக்கும்.

**தொட்டால் சிணுங்கும் அசட்டுக் குணத்தை மூட்டைகட்டி வைத்தால் தான் வைத்தியர் முன்னேற முடியும்.**



நாற்றம் என்னை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. அதற்கு மறுநாள் அதைப் பற்றியே நான் சிந்திக்கவில்லை. ஒரு சில நாட்களுக்குப் பின்னர் நானும் மல்லிகைப் பூங்காவில் உலவுவது போல் அந்த வார்டுக்குள் அலட்சியமாக வளைய வந்து கொண்டிருந்தேன். அருவருப்பு என்ற உணர்ச்சி நாளடைவில் என்னை விட்டு ஓடி விட்டது.

நான் பயிற்சி துவங்கிய முதல் நாள் பெரிய வைத்தியரின் பின்னால் எல்லோரையும் போல் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தேன். பல வார்டுகளையும் பார்வையிட்டுவிட்டுத் தலைவர் முடிவில் எலும்பு முறிவு கேஸ்கள் இருந்த வார்டுக்குள் நுழைந்தார். குப்பென்று முகத்தில் வீசிய நாற்றத்தை என்னால் சகிக்க முடியவில்லை. உள்ளே குடல்கள் புரண்டன.

மல்லிகை மலர் தோட்டத்தில் உலவுவது போல் தலைவரும், உதவி டாக்டரும் வார்டுக்குள் வளைய வந்து கொண்டிருந்தார்கள். தயங்கிக் கொண்டு வெளியே நின்ற என் பக்கம் தலைவர் திரும்பிப் பார்த்தார்.

''வாட் இஸ் தி மேட்டர்?'' என்று வினவினார். பதில் கூறாது நான் விழித்தேன். விஷயத்தைப் புரிந்துகொண்டு விட்ட அவருக்கு என் நிலை கண்டு சிரிப்புத் தான் வந்தது. ''இதென்ன அசட்டுத் தனம்? கம் ஆன்!'' என்று உத்தரவிட்டார்.

மறுக்க முடியாது மூச்சை அடக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தேன். நாற்றம் சகிக்க முடியவில்லை. குடலைப் பிடுங்கிக் கொண்டு வாந்தி வந்துவிடும் போல் அவஸ்தைப் பட்டேன். எனது சங்கடம் அவருக்கு வேடிக்கையாக இருந்தது. கொஞ்சமும் கருணையின்றி என்னைப் பார்த்து ''இந்த வார்டில் உள்ள இந்த ஐந்து கேஸ்கள் இனி உன்னுடையவை. யூ வில் பி ஆல் ரைட் ஸூன்,'' என்று உத்தரவிட்டு நகர்ந்தார்.

அந்த வார்டையும் அதனுள் எழுந்த துர் நாற்றத்தையும் கண்டு அஞ்சி நான் ஒரே ஒரு நாள் தான் ஓடினேன். துணிவைத் திரட்டிக் கொண்டு அடுத்த நாள் என் பொறுப்பில் விடப் பட்ட அந்த நோயாளிகளைக் கவனிக்க வார்டுக்குள் நுழைந்தேன்.

அசுத்தம் அழுக்கு இவைகளை அசட்டையாக நோக்கும் ஒரு மனப் பக்குவம் தானாகவே எனக்கு ஏற்பட்டு விட்டது.

ஆரம்பத்தில் சென்னையில் சொந்தத்தில் வைத்திய தொழில் நடத்திக் கொண்டிருந்தேன். எங்களது பெரிய குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்பு என்னுடையதாக இருந்தது. அதனால் பணம் என்பது மிகவும் தேவைப் பட்ட பொருளாக இருந்தது.

புதிதாகப் பாஸ் செய்து போர்டை மாட்டி விட்டிருந்த என்னிடம் நோயாளிகள் விரைவில் ஓடிவந்து விடவில்லை.

நோயாளி ஒருத்தர் வரமாட்டாரா என்று ஏங்கினேன்

என்னிடம் ஆரம்பத்தில் வந்த நோயாளிகளின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருந்தது. சில சமயங்களில் யாராவது நோயாளிகள் அகப்பட மாட்டார்களா என்று நான் ஏங்கித் தவித்ததும் உண்டு.

என் சிகிச்சைத் திறமையில் நம்பிக்கை வைத்து ஓர் இளம் கர்ப்பிணி ஒரு நாள் என்னை நாடி வந்தாள். அவளை நன்கு பரிசோதித்துப் பார்த்தேன். பேறுகாலம் முழுவதும் அவளைக் கவனித்துக் கொண்டிருக்கவும், பிரசவ சமயத்தில் வைத்திய உதவி செய்யவும் ஆவலுடன் ஒப்புக் கொண்டேன்.

வைத்தியரின் ஃபீசைப் பற்றி முன் கூட்டியே பேசி அந்தப் பெண் என்னுடன் ஒரு முடிவும் செய்து கொண்டாள். அவளுக்குப் பிரசவ வேதனை ஆரம்பமானவுடன் உற்சாகமாக என் மருந்துப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு அவள் வீட்டிற்கு விரைந்தேன்.

ஆஸ்பத்திரியில் எந்த விதமான கஷ்டப் பிரசவங்களையும் கையாள

எனக்குச் சிரமம் ஏற்பட்டதில்லை. உதவி செய்ய நர்ஸ்களும், டாக்டர்களும் தக்க ஆலோசனை கொடுத்து உதவ பெரிய ஸ்பெஷலிஸ்டுகளும் அருகில் இருக்கும்போது தைரியம் தானே அதிகம் ஏற்பட்டுவிடுகிறது.

ஆனால் தன்னந் தனியே சிகிச்சை செய்ய வேண்டி வரும்போது நிலைமை வேறு. பொறுப்பு முழுவதையும் நாமே ஏற்க வேண்டி வந்ததும் தைரியம் குறைந்து விடுகிறது. ஆரம்ப காலத்தில் வைத்தியர்கள் பலருக்கு ஏற்படும் அனுபவம் இது.

நான் அன்று ஏற்றுக்கொண்ட கேஸ் ஆரம்பத்தில் சுலபமாகத் தென்பட்ட போதிலும் முடிவில் மிகவும் கஷ்டமான பிரசவக்கேசாக மாறிவிட்டது.

டாக்டர்! உங்கள் பாக்கிக்கு

ஒருநாள் அவகாசம் கொடுங்கள்!

என்று கெஞ்சினாள் அவள்.

நேரம் செல்லச் செல்லப் பெற்றோர்கள் முகத்தில் கவலை திரையிட்டது. எனக்கோ என் திறமையைப் பற்றி சந்தேகம் வலுக்கத் தொடங்கியது. உடம்பெல்லாம் குப் பென்று வியர்த்து விட்டது. என் இஷ்ட தெய்வங்களை யெல்லாம் பிரார்த்திக் கொண்டேன். முடிவில் பிரசவம் சுகமாக நடந்தேறியது. குவா குவா என்று குழந்தை அலறியதைக் கேட்டதும் தாய் 'அப்பா! பிழைத்தேன்!' என்று கூறி ஆனந்தப் பெருமூச்சு விட்டாள். 'நானும் பிழைத்தேன்!'' என்று அவளுடன் கூட நிம்மதியாகப் பெருமூச்சு விட்டேன்.

அந்தக் கேஸ் சுகமாக முடிவடையாது எக்கச்சக்கமாக மாறி விட்டிருந்தால் என் பிழைப்பு மண்ணாகி விட்டிருக்கும்.

டாக்டரின் கைராசி மீது ஆரம்பத்திலேயே நோயாளிகளுக்கு அதிருப்தி ஏற்பட்டு விடுமே? அதற்குப் பின்னர் சில தினங்கள் அந்தப் பெண்ணுக்குத் தொடர்ந்து சிகிச்சை செய்து என் கடமையைச் செவ்வனே செய்து முடித்தேன்.

நாட்கள் சென்றன. மாதங்கள் சிலவும் சென்றன. எனக்குச் சேர வேண்டிய ஃபீஸ் பணம் வந்தபாடில்லை. என் செலவிற்கு அது சமயம் பணம் மிகவும் தேவையாக இருந்தது. ஒரு நாள் கோபத்தை அடக்க முடியாது எனக்குச் சேர வேண்டிய தொகைக்கு ஒரு பில்லும் அத்துடன் என் அதிருப்தியைத் தெரிவித்துக் கடுமையாக ஒரு கடிதமும் அந்தப் பெண்ணின் முகவரிக்கு அனுப்பி வைத்தேன்.

இரண்டு நாட்கள் பொறுத்து அவள் என்னைக் காண வந்தாள். ''டாக்டர்! உங்களுடைய ஃபீசை நான் கொடுக்கத் தயாராகத் தான் இருந்தேன். ஆனால் எதிர்பாராது கஷ்டங்கள் சில எங்கள் குடும்பத்திற்கு ஏற்பட்டு விட்டன. என் மாமனார் திடீரென்று இறந்து விட்டார். என் கணவருக்கு வேலை போய் விட்டது. வேறு வேலை தேடிக் கொண்டு அவர் பம்பாய் போயிருக்கிறார். நான் தற்சமயம் அண்ணாவுடன் தங்கியிருக்கிறேன். அவரும் பெரிய சம்சாரி. சமயத்திற்கு நீங்கள் வந்து உதவி செய்தீர்கள். அந்த நன்றியை நான் மறக்கவில்லை. ஆனால் உங்கள் ஃபீசைக் கொடுக்க முடியாமல் இழுக்கடித்துக் கொண்டிருக்கிறேனே என்று என் மனம் படும் வேதனை கொஞ்ச நஞ்சமல்ல. 'வைத்தியர் கடனை வைத்துக் கொள்ளக் கூடாது' என்று அம்மா வற்புறுத்திக் கொண்டிருந்தாள். உங்களைப் பார்த்து நான் என்ன சொல்வது என்று தயங்கிக் கொண்டிருந்த சமயம் உங்கள் கடிதமும் வந்தது.

என் கணவருக்கு வேலை கிடைத்து நிலைமை சரியாகும் வரை உங்களைக் காக்க வைப்பது சரியல்ல. ஒரே ஒரு நாள் மட்டும் அவகாசம் கொடுங்கள். என் கழுத்தில் உள்ள இந்த தங்கச் சரட்டை விற்று நாளைக் காலையில் கொண்டு வந்து உங்கள் பீசைக் கொடுத்து விடுகிறேன். இப்போது என் கையில் ஒரு செப்பு தம்பிடி கூட இல்லை, டாக்டர்'' என்றாள்.

என் மேனி சிலிர்த்தது. கட்டுக் கடங்காது பொங்கிப் புரண்ட ஓர் உணர்ச்சி வெள்ளத்திலே உள்ளம்

**இரும்பை நிகர்த்த இதயம் வைத்தியருக்குத் தேவை. சந்தர்ப்பம் வரும்போது இரும்பு இதயம் கருணையால் உருகவும் வேண்டும்.**



பெருமையுடன் காட்டி விட்டுத் தன் கையால் பின்னிய ஓர் அழகுப் பையை எனக்குப் பரிசாகத் தந்து விட்டுப்போனாள்!

வைத்தியரும் மனிதர் தான். மற்றவர்களுக்கு வரக் கூடிய நோய்கள் வைத்தியருக்கும் வரலாம். ஆனால் சாதாரண நோயாளிக்கும் நோயாளியான வைத்தியருக்கும் நிரம்ப வித்தியாசமிருக்கின்றது. சாதாரண நோயாளி மருந்தை மருந்து என்று மதித்து உட்கொண்டு குணமடைகிறார். நோயாளி வைத்தியர் குரங்கை நினைத்துக் கொண்டு மருந்தைச் சாப்பிட முயலுகிறார்.

தலைவலி வந்தவுடன் கொடி கட்டிக் கொண்டு பறக்கத் தொடங்கி விடுகிறது அவரது சிந்தனை. "இரத்த அழுத்தமாக இருக்குமோ! அப்படியானால் இரத்தக் குழல்கள் வாய் குறுகி நோயுற்று விட்டன போலும். அப்படியாக இருந்தால் நாளடைவில் இருதயத்திற்குப் பலவீனம் ஏற்பட்டு விடுமே.. அப்படியானால் ...." என்று ஓடுகிறது வாயு வேகத்தில் அவரது மனக் குதிரை.

'அறிந்து கொள்வது துன்பம், அறியாமை இன்பம்' என்பது வைத்தியர்கள் விஷயத்தில் முற்றிலும் உண்மை. இதற்கு நான் மட்டும் விதி விலக்கு அல்ல. வைத்தியர் என்ற நிலையிலிருந்து நோயாளி என்னும் நிலைக்கு மாறும் ஒரு சந்தர்ப்பம் என் வாழ்விலும் ஏற்பட்டது.

நடுங்கியது. பேசமுடியாது ஏதோ தொண்டையை அடைத்துக் கொண்டது.

நிலைமையைச் சமாளித்துக் கொண்டேன். முடிவில், "பரவாயில்லை அம்மா! உன்னை என் சகோதரி என்று நினைத்துக் கொள்கிறேன். உனக்குச் செய்த உதவி நான் என் தங்கைக்குச் செய்தது என எண்ணிக் கொள்கிறேன். நான் அனுப்பிய பில்லைப் பற்றியும் கடிதத்தைப் பற்றியும் நீ மறந்துவிடு. இந்தத் தாலிச்சரடு மங்களகரமாக எப்போதும் உன் கழுத்தில் தொங்கிக் கொண்டே இருக்கட்டும். எனக்கு பீஸே வேண்டாம்," என்றேன் மன நெகிழ்ச்சியுடன். அவளது தியாக உணர்ச்சிக்கு முன் என் தேவை சிறு துரும்பாகப் போய் விட்டது.

"உண்மையாகவா டாக்டர்!" என்று கூவிய அவள் ஓடிவந்து என்னைக் கட்டி அணைத்துக் கொண்டாள். "இந்த உதவியை நான் என்றும் மறக்கவே மாட்டேன் டாக்டர்!" என்று நன்றிப் பெருக்கிலே விசும்பினாள். பொல பொல வென்று அவளது கண்கள் உதிர்த்த கண்ணீர்த் துளிகள் என் தோள் பட்டையை நனைத்தது. அது சமயம் எனக்கேற்பட்ட ஆனந்தப் பரவசத்தை வார்த்தைகளால் சொல்லவே முடியாது.

இரும்பை நிகர்த்த இதயம் வைத்தியருக்குத் தேவை. சந்தர்ப்பம் வரும் போது இரும்பு இதயம் கருணையினால் மெழுகைப்போல் உருகவும் வேண்டும். இந்த உண்மையை எனக்கு உணர்த்திக் கொடுத்த அந்தப் பெண்ணை நான் என்றுமே மறக்கமாட்டேன்.

அவளும் என்னை மறக்கவில்லை. இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் பம்பாயிலிருந்து தாய் வீட்டிற்கு அவள் வந்திருந்த போது என்னைக் காண வந்தாள். ஆரோக்கியமாக வளர்ந்து விட்டிருந்த தன் மைந்தனை என்னிடம்

நானே ஒரு நோயாளியானேன்

என் கணவர் திடீரென்று இருதய நோயில் இறந்து விட்டதும் அவரது தொழில் விவகாரங்களைக் கவனித்துக் கொள்ளத் தொடர்ந்து நான் தென் ஆப்பிரிக்காவிலேயே வசிக்கலானேன். அது சமயம் நான் நோய்வாய்ப் பட்டேன். எனக்கு ஏற்பட்டிருந்த நோய், அதற்கு வேண்டிய சிகிச்சை, அதனால் விளையக் கூடிய கோளாறுகள் இவ்வளவையும் நானே அறிந்துகொண்டிருந்ததினால் எனக்கு என் நிலை மிக்க வேதனையை அளித்தது. 'இவையெல்லாம் தெரியாமலிருக்கக் கூடாதா..?' என உள்ளூர வருந்திக் கொண்டு இறுதியில் ஒரு ஸ்பெஷலிஸ்டிடம் ஆலோ

# மனமகிழும்
# காலைப் புத்துணர்வு
# மணிக்கணக்கில்
# நிலைத்திருக்க...

குளித்த பிறகு பாண்ட்ஸ் ட்ரீம்ஃபிளவர் டால்க்! பாண்ட்ஸ் ட்ரீம்ஃபிளவர் டால்க்கின் நீங்காத நறுமணம்...ஈரத்தை இழுக்கும் தன்மை...நாள் முழுவதும் காலைப் புத்துணர்வின் சுகம்; இவை யாவரையும் உங்களிடம் ஈர்க்கும்.

கோடையானாலும் இறுக்க மானாலும் நறுமணத்துடன் புதுமைப் பொலிவில், குளுமை உணர்வில் உங்களை திகழ வைக்கும். எக்காலத்துக்கும் ஏற்ற பாண்ட்ஸ் ட்ரீம்ஃபிளவர் டால்க் இந்தியாவிலேயே அதிக விற்பனையாகும் டால்க்.

மூன்று அளவுகளில் கிடைக்கிறது. ஃபாமிலி, பெரியது, மத்திமம்.




## பாண்ட்ஸ்
### *ட்ரீம்ஃபிளவர் டால்க்*

சொகுசான சுகமளிக்கும் மிருதுவான டால்க்
*சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடெட்*
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏயில் இணைக்கப்பட்டது)

P/5482

சனேக்குச் சென்றேன். என்னைப் பரிசோதித்து விட்டு அவர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். என்ன சொல்லப் போகிறார் என்பதை முன் கூட்டியே உணர்ந்து கொண்டிருந்த என் நெஞ்சம் பயத்தில் படபடத்தது. "ஆபரேஷன் செய்தாக வேண்டும். தாமதிப்பதில் பயன் இல்லை. உடம்பில் இரத்தம் குறைவாக உள்ளது. உடனடியாக இரவல் ரத்தம் பாய்ச்சியாக வேண்டும்," என்றார் கனிவான குரலில்.

நான் மௌனமாக இருப்பதைக் கண்டதும் அவர் லேசாகப் புன்னகை செய்தார். "உங்களுக்கு எல்லாம் தெரிந்திருக்கும். நான் அதிகம் சொல்லத் தேவையில்லை. ஆபரேஷனுக்கு ஒப்புக்கொண்டால் நர்ஸிங் ஹோமிற்கு உடனே போன் செய்து தியேட்டரைத் தயாராக்க சௌகரியமாக இருக்கும்," என்றார்

அதற்கு ஒப்புக் கொண்டு விட்டிற்கு வந்தேன் நான். மனம் சஞ்சலத்தில் தவித்தது. நானிருப்பது வெளியூர். தன்னந்தனியாக அந்நிய நாட்டில் ஆபரேஷன் செய்து கொள்வதா? அதில் ஏதாவது நேர்ந்து விட்டால் என்னை விட்டுத் தாய் நாட்டில் படிக்கப் போயிருக்கும் என் ஒரே மகனுக்கு விஷயத்தை யார் தெரிவிப்பார்கள்? பலபல நான் சிந்தித்துக் குழம்பிக் கொண்டிருக்கையில் டாக்டரிடமிருந்து டெலிபோன் வந்தது. "நர்ஸிங் ஹோமுக்குத் தெரிவித்து விட்டேன். எல்லாம் அங்கே ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது. உடனே புறப்பட்டு அங்கே போய் இருங்கள். நான் வந்து பார்க்கிறேன்!" என்று உத்தரவு போட்டார், போன் மூலம்.

நர்ஸிங் ஹோமில் படுக்கை மீது கிடந்தபடி கூரை முகட்டைப் பார்த்துக் கொண்டிருந்தேன். சிந்தனை, உலகப் புகழ்பெற்ற டாக்டர் பிலிப் ப்ளெய்பர்க் மீது சென்றது. அவருக்குத்தான் எத்தனை துணிவு! மாபெரும் அத்தனை பெரிய அறுவைப் பரிசோதனைக்குத் தன்னை உட்படுத்திக் கொள்ள முன் வந்தாரே! அவருக்கு எத்தனை மனோ திடம் இருந்திருக்க வேண்டும்! இரவல் இருதயத்தைப் பொருத்திக் கொண்ட அவரைப் பற்றி நான் சிந்தித்துக் கொண்டிருக்கையில் இரவல் இரத்தம் பாய்ச்ச வேண்டிய சாதனங்களுடன் என் படுக்கை அருகே வந்து நின்றார் ஒரு வைத்தியர். நான் திடுக்கிட்டுப் போனேன். சட்டென்று எனக்கு ஏற்பட்ட சந்தேகத்தைக் கட்டுப் படுத்த முடியவில்லை. "டாக்டர், மன்னிக்கவும். இப்போது தாங்கள் கொண்டு வந்துள்ள ரத்தம் என்னுடைய ரத்தத்தின் பிரிவினையைச் சேர்ந்ததுதானே?" என்று துணிவுடன் கேட்டேன்.

புருவத்தை உயர்த்தினார் அந்த வைத்தியர். "இது வரை என் அனுபவத்தில் நூற்றுக் கணக்கான நோயாளிகளுக்கு இரவல் இரத்தம் ஏற்றி இருக்கிறேன். இதுவரை தவறு நேர்ந்தது இல்லை. இப்போது நேரும் என்று நான் எதிர்பார்க்கவுமில்லை. அதனால் நீங்கள் அமைதியாக இருக்கலாம்," என்றார். அவர் குரலில் தொனித்த கண்டிப்பு என் வாயை அடைத்து விட்டது.

ஆனாலும் மனம் என்னவோ சஞ்சலத்தில் தவிக்கத் தான் செய்தது. 'இரத்தம் சரியாக ஓடுகிறதா? நின்று விட்டதா?' என்று அடிக்கடி சந்தேகம் ஏற்பட்டது. அதை என்னுடன் நிறுத்திக் கொள்ளாமல் வார்டின் நர்ஸைக் கூப்பிட்டுத் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தேன்.

"இங்கே வந்து பார்! டிரிப் நின்று விட்டது போலிருக்கிறது நர்ஸ்! ஓடிவா சீக்கிரம். நர்ஸ்! தலையை வலிக்கிறது. தலையணையைக் கொஞ்சம் தூக்கி வை" என்றெல்லாம் உபத்திரவப் படுத்திக் கொண்டிருந்தேன்.

சாதாரண நோயாளி இப்படிப் பாடுபடுத்தி யிருந்தால் நர்ஸ் பதிலுக்கு எரிந்து விழுந்திருப்பார். ஆனால் நான் ஒரு வைத்தியர். அதனால் அவளால் என்னை கோபித்துக் கொள்ள முடியவில்லை.

அன்று இரவு தூக்க மருந்தின் வேகத்தில் அரை நித்திரை மயக்கத்தில் படுத்துக் கிடந்த என் காதுகளில் வார்டின் நர்ஸ் அங்கு வந்த பெரிய நர்ஸிடம் என்னைப் பற்றிப் பேசவிது கேட்டது.

"நாளைக் காலையில் ஆப்ரேஷனுக்குப் போக வேண்டிய கேஸ் இது. ரொம்பத் தொண தொணப்புப் பேர்வழி."

அறிந்து கொள்வது துன்பம், அறியாமையே இன்பம் என்பது வைத்தியர்கள் விஷயத்தில் முற்றிலும் உண்மை

"டாக்டர் அல்லவா? அப்படித்தான் இருக்கும். டாக்டர்ஸ் ஆர் வெரி பாட் பேஷண்ட்ஸ்," என்று சூள் கொட்டி விட்டு நகர்ந்தாள் பெரியவள். அது எனக்குச் சுருக்கென்று பட்டது. என்ன செய்வது! அது உண்மைதானே!

இரத்தம் பாய்ச்சிய டாக்டரே மயக்கம் கொடுக்கும் நிபுணராக இருந்ததனால் காலை விடிந்ததும் விடியாததுமாக வார்டுக்குள் வந்து என் அருகில் நின்றார்." குட்மார்னிங். நன்றாகத் தூங்கினீர்களா! என்று குசலம் விசாரித்தார். ஆமாம் என்று தலையை அசைத்தேன். எனக்கு அது சமயம் யாரிடமும் பேசப் பிடிக்கவேயில்லை. கொலைக்களத்திற்கு இழுத்துச் செல்லப் படும் கைதியின் மன நிலையிலே இருந்தேன். "உங்களை இப்போது தியேட்டருக்கு எடுத்துச் செல்லப் போகிறார்கள். நான் தான் மயக்க மருந்து கொடுக்கப் போகிறேன். ஜஸ்ட் ரிலாக்ஸ்," என்றார்.

"கூட இப்போது நீங்கள் ஒரு நோயாளி. டாக்டர் என்பதை மறந்து விடுங்கள்" என்று தட்டிக் கொடுத்து உற்சாக மூட்ட முயற்சித்தாள் நின்று கொண்டிருந்த நர்ஸ்.

'இதென்ன பேத்தல்! ஒரு வருஷமா? இரண்டு வருஷமா? ஐந்தரை வருஷங்கள் ஆயிரக் கணக்கான பக்கங்களைப் புரட்டிப் படித்த படிப்பாயிற்றே! கால் செருப்புத் தேய வார்டுகளில் நடந்து கற்ற கலையாயிற்றே! மறக்க முயற்சித்தாலும் மனக் கண் முன் சினிமாப் படம் போல் நோய் விவரங்கள் தானே ஓடிவந்து நிற்கின்றதே. இதை எப்படி மறப்பது!' என்று உரத்த குரலில் கத்த வேண்டும்போல் ஓர் ஆவேசம் என்னை உலுக்கியது.

ஆனால் இரவு எனக்கு கொடுத்திருந்த தூக்க மருந்தின் சக்தி என் கண்களை அழுத்தவே நான் வாளா இருந்தேன். ஆப்ரேஷன் மேஜை மீது என்னைத் தூக்கிக் கிடத்தினார்கள். பளிச் சென்று கண்களைக் கூசவைத்தது மேலே எரிந்து கொண்டிருந்த தியேட்டர் விளக்கு. அந்த இடத்திற்கே உரித்தான மருந்து நெடி என் நாசியைத் தாக்கியது. ஆயுதங்கள் தாங்கிய டிராலிகள் நகரும் சத்தம் கேட்டது. முக மூடி அணிந்த நர்ஸ், டாக்டர்களின் கூட்டம் கண்களில் அரை குறையாகப் பட்டது. எல்லாம் மிகவும் பழக்க மானவை. ஆனால் இப்போது என் நிலை தான் வேறானதாக இருந்தது.

மேஜை அருகே உதவிசெய்ய நின்று கொண்டிருக்க வேண்டியவள் மேஜை மீது படுத்துக் கிடந்தேன். மயக்க மருந்து கொடுக்கும் வைத்தியர் என் அருகே நெருங்கி குனிந்தார். மேஜை மீதிருந்து தொப்பெனக் குதித்து ஓடிவிட வேண்டும் போல் ஒரு ஆத்திரம் ஏற்பட்டது எனக்கு. ஆனால் அடுத்த நிமிஷம் மிகவும் இருண்ட ஒரு பாதைக்குள் யாரோ என்னைத் தள்ளி விட்டது போலிருந்தது. பின்னர் ஒரே இருட்டு.

கண்களை விழித்துக் கொண்டு பார்த்த போது ஸ்பெஷலிஸ்ட் என் முகத்தருகே குனிந்து கொண்டு நிற்பதைக் கண்டேன். "எல்லாம் சரியாகி விட்டது. இனி பயமில்லை. ஆர் யூ ஹாப்பி நௌ?" என்று கேட்டார்.

"மிக்க நன்றி டாக்டர். ஐ ஆம் வெரி ஹாப்பி. இட் இஸ் வெரி நைஸ் டுபி அலைவ்," என்றேன்,

"எனக்குத் தெரியும், உங்கள் மனம் என்னவெல்லாம் பாடு பட்டிருக்கும் என்று. டாக்டர்களான நம்மிடம் ஒரு கெட்ட குணம் உண்டு. அது என்ன தெரியுமா? சந்தேகம்! சாதாரண நோயாளிக்கு இருக்க வேண்டிய நம்பிக்கை நம்மிடம் குறைவாக இருப்பதினால்தான் வீண் சஞ்சலத்தில் மனத்தை அலட்டிக் கொள்கிறோம். டாக்டர் முதலில் சாப்பிட வேண்டிய முக்கிய மருந்து நம்பிக்கை என்பது," என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

அது முற்றிலும் உண்மை என்பதை அறிந்து புரிந்து கொண்டேன். 'நான் நோயாளி, அவர் வைத்தியர். என் உடம்பை, கவனித்து, குணப்படுத்தி விடுவார்,' என்ற நம்பிக்கை பூரணமாக என்னிடம் இருந்திருந்தால் வீணான சஞ்சலத்தில் தவித்திருப்பேனா?

டாக்டருக்குத் துணிவு வேண்டும். குழைவு வேண்டும். அருவருப்பைக் கண்டு அஞ்சாத மன நிலை வேண்டும். எல்லாவற்றையும் விட, தன் திறமையிலும் பிறர் திறமையிலும் நம்பிக்கை வேண்டும். இன்னமும் என்னென்ன வேண்டும்? . . . . . . . .

"வைத்தியனே! உன் நோயைக் குணப் படுத்திக் கொள்." இந்தப் பொன்மொழியின் பொருளை இன்னமும் பூரணமாக நான் உணர்ந்து கொள்ளவில்லையே!


6
முகமூடி
லீ:.பாக்
26-3-70


அனல் குழம்பு ஆற்றுக்கு அப்பால் - மர்மமான சித்திரக் குள்ளர்கள் —
முகமூடியாரே! எங்கள் கப்பலுக்கு வாருங்கள்!
எங்கள் ஜனங்கள் உங்களைப் பார்த்தால் மகிழ்ச்சி அடைவார்கள்!
மன்னியுங்கள் இம்முறை வருவதற்கில்லை. வேறொரு முக்கிய வேலை.


முகமூடியாரே! எங்களைப் பற்றி உங்களுக்கு நன்றாய்த் தெரியும். ஏதாவது உதவி வேண்டுமானால் சொல்லுங்கள்.
பனி மலைக்குப் போயிருக்கும் ஒரு நபரையும் அவர் மகளையும் தேடுகிறேன்...


விமானம் என்று நாங்கள் சொல்கிறோமே - மனிதப் பறவை - அது ஏதேனும் உங்கள் கண்ணில் பட்டதா?
ஆமாம்! ஏகப்பட்ட சத்தத்துடன் ஒன்று பறந்தது!


கட்டாயம் மறுபடி இங்கே வர வேண்டும்!
நிச்சயமாய் வருகிறேன்!
ஏன் இவர்கள் தங்கள் குகையைக் கப்பல் என்று சொல்கிறார்கள்?..


டாக்டர் வீபரும் அவர் பெண்ணும் பெரிய வெளியில் இறங்கினார்களாம்... நாமும் அங்கே போவோம்...

''அதற்கென்ன, இதோ கொண்டு வருகிறேன்,'' என்று வீட்டுக்குள் சென்று எடுத்து வந்தார் ஷண்முகம்.

அவனுடன் பெற்றுக்கொண்ட ஏகாம்பரம், ''கொஞ்சம் தண்ணீர் கொடுங்களேன் தாகத்துக்கு,'' என்று ஷண்முகத்தைத் திருப்பியனுப்பினார். பரபரவென்று சீட்டுக்களைப் பார்த்தார். இதோ 613427.

டிக்கெட்டை எடுத்துச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டு, தான் தயாராக வைத்திருந்த வேறொரு டிக்கெட்டை நடுவில் வைத்தார் ஏகாம்பரம்.

''இவ்விக்குத்தானே குலுக்கல்?'' என்றார் மோருடன் வந்த ஷண்முகம்.

''ஆமாங்க... அதனாலேதான் முடிவு வெளியாகறதுக்கு முன்னேயே அவசரமாய்ச் செக் பண்ணுகிறேன்.'' டிக்கெட்டுகளைத் திருப்பிக் கொடுத்தார். ''எண்ணிப் பார்த்துக்குங்க. இருபது டிக்கெட். சரியா இருக்குதா?''

ஷண்முகம் எண்ணினார். இருபது டிக்கெட்டுகள் சரியாக இருந்தன.

ஏகாம்பரம் புறப்பட்டார். லட்சாதிபதி என்கிற நினைவில் நடைகூட ஒரு மாதிரியாக இருந்தது!

**வா**னொலியைத் திருப்பினார் ஏகாம்பரம். பிராந்தியச் செய்திகளில் பரிசு அறிவிப்புகள்— ஒவ்வொரு வரிசையும் முடிந்து கடைசி வரிசை வந்தது.

நன்றாகக் காதைத் தீட்டிக்கொண்டு கேட்டார் ஏகாம்பரம்.

ஐயோ, இதென்ன!

பரிசு பெற்ற எண் 637386 என்றல்லவா சொல்கிறார்கள்!

வானொலி தொடர்ந்தது: ''ஒரு முக்கிய அறிவிப்பு. கடைசி வரிசையின்போது, உருளைகள் சுற்றுவதில் கொஞ்சம் தவறுகள் ஏற்பட்டன. எனவே 613427 என்று அறிவிக்கப்பட்டது தவறு. மறுபடியும் உருளைகள் சுற்றப்பட்டன. 637386'க்கு முதல் பரிசு ஒரு லட்சம் கிடைத்துள்ளது....''

தலைச்சுற்றலின் நடுவே ஏகாம்பரம் கைப் பையையும் துழாவினார். 637386 என்றா சொன்னார்கள்? சென்னையில் ஓரிடத்தில் அதை ஒருநாள் வாங்கினேனே...ஆனால் அதைப் பையில் காணோமே...

ஓ! ஷண்முகத்திடம் 613427'க்குப் பதிலாக வைத்துக் கொடுத்துவிட்ட டிக்கெட் அதுதான்!




''என் கிளாஸில் ஒரு பையன் அடிச்சுட்டான், அப்பா.''

''எங்கே அவன்? என் மாஜிக்கினாலேயே தொலைத்து விடுகிறேன்!''

''அதோ, அந்த படு அப்பா!''

''ஒன்றுமில்லை... வாத்தியாரைப் பார்த்து ரொம்ப நாளாச்சே என்று தான் வந்தேன்.''



# பெரிய மனிதர் வீட்டுப் பெயிண்டிங்

பேட்டி: பால்யூ

அடையாறு காந்தி நகர் இரண்டாவது மெயின் ரோடில் ஓர் இல்லம். செலபள்ளி மகாராஜாவின் சகோதரி திருமதி விசாலாட்சி அம்மாள் வசிக்கும் இந்த இல்லத்தில் அபூர்வமான சித்திரங்களும், கலைப் பொருள்களும் சேகரித்து வைத்திருக்கிறார்கள்.

மகாராஜாவின் மைத்துனரான திரு. ராமநாத பாபு கூறுகிறார்: பல ஆண்டுகள் வரை இந்தச் சித்திரம் பித்தாபுரம் மகாராஜாவின் குடும்பத்தாரிடம் இருந்தது. தாக்சர் சிங் என்னும் ஓவியர் 1925'ம் ஆண்டு வரைந்த ஆயில் பெயிண்ட் இது. புதிதாக மணம் புரிந்துகொண்ட அழகி ஒருத்தியின் மணவறைத் தனிமைக் காட்சி இது.

1

# முகமூடி



லீ:பாக்

19·2·70














# பெரிய மனிதர் வீட்டுப் பெயிண்டிங்



அமைதி தவழும் தேனாம்பேட்டை செனடாஃப் சாலையிலுள்ள திரு. எஸ். ஒய். கிருஷ்ணசாமி, ஐ.ஸி.எஸ். அவர்களின் பங்களாவில், வரவேற்பு அறையில் நீங்கள் அமர்ந்ததும், இடது பக்கம் சுவரில் பளிச்சென்று கண்ணில் படும் இந்த ஓவியம்.

Anxious Heart என்பது இந்தப் படத்துக்கு ஓவியர் கொடுத்துள்ள தலைப்பு.

"முப்பது ஆண்டுகளுக்கு முன்பு மைசூரில் ஒரு சித்திரக் கண்காட்சியில் இருநூறு ருபாய்க்கு வாங்கினேன் இதை. எஸ். சுவாமி என்ற ஓவியர் வரைந்த படம் இது. உணவு செல்லாமல் வருந்திக் கொண்டிருக்கும் மங்கையின் சோகத்தை ஓவியர் எவ்வளவு அழகாகச் சித்தரித்திருக்கிறார்!

அவள் மறுத்து ஒதுக்கிவிட்ட பாலை பூனை குடித்துக் கொண்டிருக்கிறது. 'பாலும் கசந்ததடி, சகியே' என்ற பாரதியாரின் வரிகள்தான் இந்தப் படத்துக்குப் பொருத்தமான தலைப்பு என்று எனக்குப் படுகிறது," என்கிறார் திரு. எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி.

—என். பி.

ஒரு புதிர்

# இந்த மங்கையர்களைத் மாலையிட்டவர்கள் யார் ?

1. யசோதரை

2. செல்லம்மா

3. கோப்பெருந் தேவி

4. விக்டோரியா

5. சாரதாமணி

6. மிருணளினி

ஜோஸபின்

7. சம்யுக்தை

8. ஸ்வரூப் ராணி

௯ மும்தாஜ்

சரிபார்க்க: 28'ம் பக்கம்

# அறிமுகம்

தமிழகமும் ரோமும் எல்லா வகையிலும் உறவாடியிருக்கக் கூடும் என்பதற்கான சான்றுகள், புதை பொருள் ஆராய்ச்சி மூலமும்—இலக்கியங்கள் வாயிலாகவும் வரலாற்றிலிருந்தும் வெகுவாகக் கிடைத்திருக்கின்றன.

இந்தப் பழைய தொடர்பினை வைத்துத்தான் 'ரோமாபுரிப் பாண்டியனை' உருவாக்கிடத் துணிவு பெற்றேன்.

முன்பு இந்த வரலாற்றோவியம் 'முத்தாரம்' இதழில் தொடர்கதையாக வெளி வந்துகொண்டிருந்தது. பொதுத் தேர்தலுக்காக ஓடியாடிய போதும், பொதுப்பணி அமைச்சராகப் பொறுப் பேற்றுக்கொண்ட பின்னரும், எனக்கு ஓய்வோ, உறக்கமோ ஏது? என்றாலும் கூட, என் எழுத்து வேட்கை என் கரத்தைப் பற்றி இழுத்து இழுத்து இந்த வரலாற்று ஓவியத்தைத் தீட்டவே தூண்டிற்று!

ஆனால்—

அறிவுப் புதையலாகவும் ஆற்றல் விளக்காகவும் நமக்கெல்லாம் வழி காட்டியவரும், என் இரத்தத்தின் உயிர் அணுக்களாக—இல்லை—என் வழிபடு தெய்வமாகவே—விளங்கிய பேரறிஞர் அண்ணா படுக்கையில் சாய்ந்தார் என்றதுமே என் இதயமும் படுத்தது! எழுது கோலும் விழுந்தது! கற்பனைப் புள்ளும் காலொடிந்த கதியடைந்தது!

அடுத்து—

அண்ணனின் அடிச்சுவட்டில் முதலமைச்சர் பொறுப்பேற்றேன். ''சூழ்நிலைகளின் கைதி'— என்று அண்ணா சுவையொழுகச் சொன்னாரே அதே நிலை தான் எனக்கும்!

ஆயினும்—

ரோமாபுரிப் பாண்டியன் பெருவழுதி என்னை அரைகுறை ஓவியமாக ஆக்கலாமா என்று கேட்கிறான்!

முத்துநகையோ முகஞ்சுளித்து —இல்லை, சினத்தையே காட்டுகிறாள்!

தாமரையோ தனித்துப் புலம்பு



# ரோமாபுரிப் பாண்டியன்

## கலைஞர் மு. கருணாநிதி

கிருள்!

செழியனே, சிந்தை வாடிப் பரிதாபமாக என்னைப் பார்க்கிறான்!

இந்நிலையில், கடமையையும் மறந்து விடாமல், கற்பனைப் புள்ளையும் சிறகடித்துப் பறக்க விடுமாறு என் எழுத்து வேட்கை தூண்டுகிறது.

ஆகவே, என் அருமை வாசக நண்பர்களே, 'குமுதம்' வாயிலாக 'ரோமாபுரிப் பாண்டிய'னின் முழுச் சித்திரத்தையும் உங்களுக்கு வழங்க முற்படுகின்றேன்.

முதலில் 'முத்தாரம்' இதழ்களில் வெளியான கதைப் பகுதியைச் சற்றுச் சுருங்கிய அளவிலேயே தரப் போகிறேன்.

பின்னர், ரோமாபுரியின் பெருஞ் சிறப்பையும் பழந் தமிழகத்தின் அருஞ் சிறப்பையும் இணைக்கும் விரிவான காவியமாக 'ரோமாபுரிப் பாண்டியன்' உங்களைக் களிப்பில் ஆழ்த்துவான்.



மா வீரன் பாம்பே - மாவீரர்களை மண்டியிட வைத்த சீசர்—சீசர் வளர்த்த சிங்கம் அந்தனி — அந்தனியை அடக்கிய அகஸ்டஸ் — இப்படி வீரத்திரு விளக்குகளின் ஒளி மழையால் எழில் கொண்டு விளங்கிய பூமி ரோமாபுரி!

அது வாழ்ந்த விதமும், தாழ்ந்த கதையும் யாரும் அறியாத ரகசியமல்ல. ரசவல்லிகளின் மை விழிகள்—மதுக் கிண்ணங்கள்—இவைகளே அந்தத் திருநாட்டின் பெரு வீழ்ச்சிக்குக் காரணமென்ற விளக்கத்தை வரலாறு

புலம்பிக் காட்டுகிறது. ஏற்றமும் பொலிவும் துலங்க என்றைக்கோ ஒருநாள் மலையில் ஏற்றிவைத்த தீபம்போல் அந்தச் சின்னஞ்சிறு சிங்காரப் பொன்னாடு எட்டுத் திக்கும் புகழ் பரப்பிக் கொண்டிருந்தது.

ரோமாபுரியின் முதலாவது



மன்னர் மன்னனாக மணி மகுடம் அணிந்து கொண்டான் ஆக்டேவியஸ். ''மகிமை பொருந்திய மாவீரன்'' என்ற வீர வாசகத்தின் சுருக்கமான பெயராக ''அகஸ்டஸ்'' என்ற பட்டத்தை ரோமாபுரிப் பாராளுமன்றம் ஆக்டேவியசுக்குப் பூரிப்போடு சூட்டி மகிழ்ந்தது.

அகஸ்டஸ் சீசர் அரிமாவென நின்று ஆர்ப்பரித்தான்—அந்தோணியோ அந்தப்புரத்தில் சுருண்டு கிடந்தான். இந்த நிலைக்குரிய காலம் ஏறத்தாழ கி. மு. 30 என்று கூறலாம்.

ரோமாபுரியிலே கோலோச்சிய அகஸ்டஸ் சீசரின்பால் பாண்டிய மன்னன் தனது தூதுவரை அனுப்பியிருந்தான் என்று குறிப்புக்கள் காணப்படுகின்றன.

அங்ஙனமாயின் அந்தத் தூதுவரை ரோமாபுரி அகஸ்டஸ் மன்னனிடம் அனுப்பிவைத்த பாண்டிய மன்னன் யார்?

அந்தக் காலத்திலேதான் நமது பழம் பெரும் தமிழகத்தில் முப்பேரரசுகளின் கொடி நிழலில் கொற்றம் தழைத்துக் கொண்டிருந்தது எனவும், சோழ மண்டலத்தில் திருமாவளவன் இரண்டாம் கரிகாற் பெருவளத்தான் ஆண்டு கொண்டிருந்தான் எனவும் வரலாற்றுப் பெரியவர்கள் வரையறுத்துள்ளார்கள்.

இந்தக் கரிகாலனின் காலம் கி. மு. 60 முதல் கி. மு. 10 வரை என்



பதாகத் தமிழ்ச் சான்றோர் குறிப்பிடுகின்றனர்.

புறம் ஐம்பத்தெட்டாவது பாடலில் காரிக்கண்ணனார், சோழன் கரிகாலனையும், பாண்டியன் பெருவழுதியையும் ஒருசேர வாழ்த்துகிறார்.

இதனைக் கொண்டு கரிகாலன் காலத்துப் பாண்டியன் பெருவழுதி யென்று முடிவு கட்டுகிறோம்.

அந்தக் காலத்திலேதான் ரோமாபுரியில் அகஸ்டஸ் சீசர் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்திருக்கிறான். அதாவது கி. மு. 39 முதல் கி.பி. 14 வரையில்.

உலகமெங்கும் ரோம சாம்ராஜ்யத்தின் ஒளிக்கதிர்கள் ஊடுருவிச் செல்வதற்கான வழி வகுத்த அகஸ்டஸ் சீசரின் காலத்தை ரோம்நாட்டு வரலாறு 'தங்க ஏடு' எனச் சிறப்பித்துக் கூறுகிறது. டான்யூப் நதியும் ரைன் நதியும் வடக் கெல்லையாக அமைக்கப்பட்டு, வட கிழக்கே கருங்கடலைக் கொண்டு, தெற்கே அராபிய பாலைவனத்தின் விளிம்புகளைத் தொட்டு, மேற்கே அட்லாண்டிக் கடலை எல்லையாகப் பெற்று ரோம் சாம்ராஜ்யம், உலகத்தின் கண்களிலே பட்டொளி பாய்ச்சிக் கொண்டிருந்தது.

ரோம் பேரரசை நிலைநாட்டுவதற்கென அகஸ்டசுடன் அந்தணியும் சேர்ந்தே பாடு பட்டான். ஆனால் அந்தணியின் ஆற்றலையும் வீரத்தையும் எகிப்து நாட்டுக் கிளியோ தனக்கு அடிமை யாக்கிக் கொண்டது. ரோம் நாட்டுப் பாராளுமன்றத்தில் அந்தணி, தனது மதிப்பை இழக்க ஆரம்பித்தான். முதலிலே அகஸ்டசுக்கு அந்தணியின் போக்கு வருத்தத்தையே தந்தது. அவனைத்திருத்தி, திறமை முழுவதையும், திண் தோள் பலத்தினையும் ரோம் நாட்



டின் வளர்ச்சிக்கே ஆக்கிட வேண்டுமென விரும்பினுன்.

அந்தணியோ, சீசர் சாய்ந்து கிடந்த சிங்காரியின் மடியில் ஜெகமே இருப்பதாகக் கருதினுன். அவள் இதழ்த் தேனைப் பருகிட முனையும்போது சுருக் கெனக் கொட்டும் தேனீக்கள்போல அவளது விழிகள் அலைந்து கொண்டிருக் கின்றன என்று நைல் நதிக் கரையிலே நின்று நீரிலாடும் நிழலுக்குக் காதல் கதை கூறிக்கொண்டிருக்கும் அந்தணியை எப்படியும் ரோமுக்குத் திரும்ப அழைத்து விட வேண்டுமென்று அவன் முதல் மனைவி துடியாய்த் துடித்து அதன் காரண மாகவே அகஸ்டசுடன் போரிட்டு, இறுதி யில் மடிந்தாள்.

அகஸ்டசுக்கு அந்தணியின் மனத்தைத் திருப்ப ஒரே ஒரு மார்க்கந் தான் புலப்பட்டது. அகஸ்டஸ், தன் அருமைத் தங்கையை அந்தணிக்கு மண முடித்துக் கொடுத்தான்.

அந்தணி — அகஸ்ட்சின் தங்கை ஆக்டேவியா இருவரின் மணவிழா ரோம் நாட்டுப் பெருவிழாவாகக் கொண்டாடப் பட்டது. போர்க்காலங்களில் அகஸ்டசுக்கு எதிர்ப் பாக நின்று வெளிநாடுகளுக்கு ஓடிவிட்ட வர்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டு மண விழாவுக்கு அழைக்கப்பட்டனர். அந்தணி யும் ஆக்டேவியாவும் மணவிழா முடிந்து இன்பக் கேளிக்கை கூடத்தில் புகுந்தனர். நைல் நதி தீரத்து நீலப் புள்ளின் இன் பத்தில் பாதியையாவது ஆக்டேவியாவி டம் பெறலாமா என்று கணக்குப் போட்ட வாறு கட்டிளைக் காவியத்தைத் தீட்டத் தொடங்கினுன் அந்தணி. நிலவொளி யிலே விருந்து மண்டபங்களில் ஆடிப் பாடி மகிழ்ந்தனர் அரச குடும்பத்தினரும் சீமான்கள் வட்டாரத்தினரும்!

அந்தணிக்கும் தனக்கும் நேசம் பாசமெல்லாம் மென்மேலும் அதிகரிக் கும் என்ற திருப்தியுடன் விருந்து மண்ட பத்திலே ராஜ நடை போட்டுக் கொண் டிருந்தான் அகஸ்டஸ். அவன் காதிலே இன்பத்தில் தோய்த்தெடுத்த கனிச் சொற்கள் சில பல விழுந்தன. சொல்லின் இனிமை கேட்டுத் தயங்கி நின்றுன். தன் அந்தஸ்தை ஒருமுறை நினைவு படுத் திக்கொண்டு நடக்க ஆரம்பித்தான். கால்கள் பூமியிலேயே ஒட்டிக் கொண்டன. நகர மறுத்தன. திரும்பினுன்.

மலைபோன்ற மேனி படைத்த ஆணுருவம் ஒன்றின் மீது அலைபோல ஆடிக்கிடந்தாள் அழகு மயில் ஒருத்தி!

''யார் அது?'' என்று கேட் டான் மெய்க்காப்பாளனை நோக்கி.

''அவர்தான் கிளாடியஸ் நீரோ என்ற பெரிய சீமான்!'' என்று பதில் கூறினுன் அவன்.

''முட்டாளே! அதையா கேட் டேன்; அந்த ரோஜா மலர் யார்?'' என்று கோபத்தையும் தாபத்தையும் கலந்து குரல் எழுப்பினுன் அகஸ்டஸ்.

''அவளா?... அவள்தான் அந்தச் சீமானின் மனைவி. பெயர் லிவியா!''—இது மெய்க்காப்பாளனின் பதில்.

அகஸ்டஸ், சிறு கனைப்புக் கனைத்தான். லிவியா அவனைப் பார்த் தாள். கணவனையும் உற்றுப் பார்த்தாள். அவன் மது மயக்கத்தில் தள்ளாடிக் கொண்டிருந்தான். தங்கக் கிண்ணத்தை மதுவால் நிரப்பினுள். கணவனின் வாயில் ஊற்றினுள். அவன் மயங்கிச் சோர்ந்து அவள் மீது சாய்ந்தான். சாய்ந்தவனைப் பளிங்கு மேடையில் மெதுவாகப் படுக்க வைத்தாள். இத்தனை காரியங்களைச் செய் யும் போதும் அவள் கண்கள் அங்கில்லை; அவை அகஸ்டசின் மார்பகத்தைச் செங் குத்தாகத் துளைத்துக் கொண்டிருந்தன.

கணவன் அருகில் அமர்ந்த வாறு அகஸ்டசின்மீது பதித்த விழிகளை மேலும் மேலும் ஆழமாக அவன் நெஞ் சத்தில் அழுத்திக் கொண்டிருந்தாள். அகஸ்டஸ் புன்னகை புரிந்தான்; அவள் புன்னகை புரியவில்லை; கண்ணுல் சொன் ஞள்.

அகஸ்டஸ், தன் நீண்ட கரத்தை அவள் முன் நீட்டியவாறு வாட்டசாட்டமாக நின்றுன். லிவியா எழுந்துவிட்டாள். இருவர் கைகளும் ஒன்றையொன்று பற்றிக் கொண்டன. அருகே இழுத்தான். இழுப்பதற்குமுன் அவளே அவன்மீது துவண்டு விழுந்து விட்டாள். மெய்க்காப்பாளன் மெல்ல அந்த இடத்தைவிட்டு நகர்ந்துவிட் டான்.

''இதுவரை உன்னை நான் சந்திக்காமல் இருந்தது பெருங் குறை யல்லவா லிவியா?'' என்று பெருமூச்சு டன் புலம்பினுன் அகஸ்டஸ்.

''என்னை இதற்குமுன் சந்தித் திருந்தால், போர் மேகம் சூழ்ந்த நேரத் தில் உமக்குப் பயந்து நாங்கள் ஏன் ஊரைவிட்டு ஓடப்போகிறோம்?'' என்று



கண்ணீர் முத்துக்களால் அவன் இதழ்களை ஈரமாக்கினாள்.

"இனி என்றும் நாம் பிரியலாகாது. என்ன சொல்லுகிறாய்?"—இது அவன்.

"இப்போதே பிரிந்துதானே நிற்கிறீர்கள்!"—இது அவள்.

நீரோடு நீர் கலந்தது போல் ஒன்றாகி நின்றனர்.

"சீமாட்டியை ராணியாக்கப் போகிறேன்; சம்மதம்தானே?"

"சிம்மாசனம் தேவையில்லை எனக்கு! உமது இதயாசனமே வேண்டும்!"

"அகஸ்டஸ் இதுவரை யாருக்கும் அடிமையில்லை. இன்று முதல் லிவியாவின் நிரந்தர அடிமை!"

இதைக் கேட்டு லிவியாவின் கண்களிலே சுடரொளி கிளம்பிற்று. இதழ்கள் துடித்தன. இடை நெளிந்தது. கன்னங்களில் குழிச் சிரிப்புத் தலை நீட்டிப் பார்த்தது.

"என் தங்கமே!" என்று தழுவிக் கொண்டாள்.

நிலவு ஒளிந்து கொண்டது.

விடிந்துவிட்டதை வான் வெள்ளி அறிவித்தது. அகஸ்டசும் லிவியாவும் கிளாடியஸ் நீரோ என்ற லிவியாவின் கணவன் படுத்திருந்த இடம் நோக்கிச் சென்றார்கள். அங்குள்ள பளிங்கு மேடையில் கீழ்க்கண்டவாறு செதுக்கியிருந்தது.

"மன்னர் விரும்பிவிட்ட பிறகு மனைவியென்ன; எதையும் கொடுக்க நான் தயார்!—இப்படிக்கு கிளாடியஸ் நீரோ."

அந்த எழுத்துக்களின் மீதே இருவரும் அமர்ந்தனர். கணவனின் தியாக உள்ளத்தை லிவியா பாராட்டினாள். அகஸ்டசுக்குச் சற்று முகம் மாறியது. அதை முத்தங்களால் சரிப்படுத்திவிட்டாள் அந்த முத்துநகைப் பேரழகி!

அகஸ்டஸ்—லிவியா திருமணமும் மிக விமரிசையாக ரோம் நாட்டில் கொண்டாடப்பட்டது. லிவியா, ராணியானாள். 'என் மனைவி இப்போது இந்தத் தேசத்து ராணியாக்கும்' என்று நண்பர்களிடம் பெருமை பேசிக்கொண்டான் சீமான் கிளாடியஸ்!

லிவியா, பட்டயானையாதும் இடத்தை உறுதிப்படுத்திக்கொள்ள பெரு முயற்சிகளில் ஈடுபட்டாள். அந்தணிக்கும் அகஸ்டசுக்கும் முகிழ்ந்துள்ள உறவை அரும்பிலேயே அழித்துவிடக் கங்கணம் கட்டிக் கொண்டாள். அந்த உறவு முற்றுமேயானால், தன் எண்ணப்படி அகஸ்டசை ஆட்டிவைக்க முடியாது என்று லிவியா கருதினாள்.

ரோம்மீது பாம்பே என்ற ஒருவன் படையை மோத முரசு கொட்டினான். அவன் ரோமிலிருந்து தோற்றோடியவன். அவனை எதிர்ப்பதற்கு அகஸ்டஸ் அந்தணியின் துணையையும் விரும்பினான். லிவியா, குறுக்கிட்டாள்.

"உமக்கு ஆற்றல் இல்லையா? உமது கரத்தில் வலுவில்லையா? என்னை அணைத்து மகிழ மட்டும்தான் கற்றீரோ? எதிரிகளின் உயிர் அணைக்கமாட்டீரோ?" எனக் கேலி பேசினாள் லிவியா!

அகஸ்டசுக்குத் தலையணை மந்திரம் தலைக்கேறிற்று. குழப்பமுற்றான். அந்தணி என்ன கருதிக் கொள்வானோ என்று சங்கடப்பட்டான். நண்பர்களையெல்லாம் கலந்து யோசித்தான். அனைவருமே அந்தணியின் துணை பெற்றுப் போரில் இறங்குவதே நலமென்றனர். ரணகள சூரன் அகஸ்டஸ், ரசவல்லியாம் லிவியாவின் வார்த்தைகளைத் தட்ட முடியாமல் தவித்தான்.

இறுதியில் வழக்கம்போல் பெண்ணே வென்றாள். தன்னைக் கலக்காமல் அகஸ்டஸ் போர்க்களத்தை உருவாக்கிய சேதி கேட்டுக் கொதித்தான் அந்தணி. அவன் மனைவி ஆக்டேவியாவுக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. ஒரு பக்கம் அண்ணன்—இன்னொரு பக்கம் ஆளன்! இடையில் நின்று அழுதாள்.

அண்ணனிடம் தூது சென்று இருவர் நல்லுறவை வளர்ப்பதாகக் கூறி அவள் புறப்பட்டாள்.

இதுதான் சமயமென்று அந்தணி, எகிப்துக்கு இறக்கை கட்டிக் கொண்டு பறந்தான்.

இடையில் தொய்வு ஏற்பட்டிருந்த இன்பக் கேளிக்கைகளில் மீண்டும் புது முறுக்கு ஏறிற்று.

அந்தணியும் கிளியோபாட்ராவும் எகிப்தில் ஆடும் காதல் ஆட்டங்

களை அகஸ்டஸ் அறிந்தான். அதுபற்றிப் பகை வளர்க்கும் நேரமிதனையில் தூபம் போட்டுக் கொண்டேயிருந்தாள், லிவியா! அப்போது தங்கை ஆக்டேவியாவும் அண்ணனிடம் அழுது புலம்பிட வந்து சேர்ந்தாள்.

''நீதானேயண்ணு திருமணத் திட்டமே வகுத்தாய்? இன்று நீயே எங்களைப் பிரித்துவிட வழிவகுத்துவிட்டாயே; நியாயமா?'' என்று வாதத்தைத் துவக்கினாள் ஆக்டேவியா.

''போடி போ! பொல்லாத நியாயத்தைப் பிளக்க வந்துவிட்டாள்!'' என்று புகை கக்கினாள் லிவியா!

அண்ணியின் சொற்களில் அக்கினியைக் கண்ட அவள், அண்ணனிடம் இனிப் பாசத்தை எதிர்பார்க்க முடியாது என்று நொந்து திரும்பினாள்.

''அந்தணியை இன்னும் விட்டு வைத்தால்...ரோம் நாட்டு மகுடத்தை கிளியோபாட்ராவின் மகனுக்குத்தான் கட்டப் போகிறான். இது அநியாயம்.'' இந்த மந்திரத்தை மதுவோடும், முத்தங்களோடும் கலந்து மடிமீது கிடந்த அகஸ்டசுக்கு அளித்து வந்தாள் லிவியா! அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்! மடிமேல் மயக்கம் தந்து அகஸ்டசை மாற்றிப் போட்டாள் லிவியா.

அந்தணியைப் போருக்கு அழைத்துவிட்டான் அகஸ்டஸ்!

கி. மு. 32'ல் அந்தணிக்கும் அகஸ்டசுக்கும் போர் மூண்டது. அந்தணி, களத்திற்குப் புறப்பட்டான். அவனைத் தொடர்ந்து கிளியோபாட்ராவும் போர்க் கப்பலில் புறப்பட்டாள். போராட்டம் மிக உக்கிரமாக நடைபெற்றது. போர் முடிவடைவதற்கு முன்பு போரின் முடிவு பற்றி ஐயங்கொண்ட கிளியோபாட்ரா, தன் கப்பல்களைத் திருப்பிவிட்டாள். காதலி திரும்புவது கண்ட அந்தணியும் அவளைத் தொடர்ந்தான். இதன் விளைவாக வெற்றி அகஸ்டஸ் கைக்குப் போய்ச் சேர்ந்தது. தோல்வி கண்ட அந்தணி மீண்டும் தன் காதலரசியுடன் துவண்டு கிடந்தான்.

நேரம் பார்த்திருந்த அகஸ்டஸ் சீசர், எகிப்தின் தலைநகரமான அலெக்ஸாண்டிரியாவின்மீது முற்றுகையிட்டான். எரிமலையெனக் குமுறி யெழுந்தான் மாவீரன் அந்தணி. அவனது வீர முழக்கம் கேட்டு அகஸ்டசின் படைகள் சிதறியோடின.



ஆனால்கடைசி நேரத்தில் எகிப்திய வீரர்கள் அந்தணிக்கு எதிராயினர். காட்டிக் கொடுக்கும் பணியில் இறங்கினர். அந்தணி, கிளியோபாட்ராவின்மீதே சந்தேகம் கொண்டான். அவளை அறவே வெறுத்தான். அவளை விட்டு விலகித் தனியிடத்தில் கிடந்தான். காதலன், தன் மீது கொண்ட தவறான எண்ணத்தைப் போக்கிட வழி தெரியாது தத்தளித்தாள் கிளியோபாட்ரா.

அப்போது அவளது தோழி சார்மியான் அவளிடம் வந்தாள். ''என்னடி செய்வேன்? என்னுடையவரின் இருதயத்தில் மீண்டும் இடங் கிடைக்காதோ எனக்கு?'' என அழுதாள் அரசி.

''நான் வழி சொல்லுகிறேன்; கேளுங்கள். அந்தணியிடம் பரபரப்புடன் ஓடுகிறேன். 'அய்யோ! சேதி தெரியுமா? கிளியோபாட்ரா இறந்துவிட்டாள்,' என்று கதறுகிறேன். அவர் உண்மையிலேயே உங்களை வெறுத்துவிட்டாரா இல்லையா என்பதை உடனே புரிந்து கொள்ளலாம்!'' என்று தந்திரம் கூறினாள் சார்மியான்.

''சார்மியான் கூறுவது சரியல்ல அம்மா! ஏதாவது விபரீதமாக நடந்தாலும் நடந்துவிடக்கூடும்!'' என்று எச்சரித்தவாறு ஓர் இளம் பெண் ஓடி வந்தாள்.

தங்கப் பதுமைபோன்று காட்சியளித்த அந்தப் பெண்ணுக்குப் பன்னிரண்டு வயதுதான் முடிந்திருக்கக்கூடும். பருவத்தின் விளிம்பைத் தொடுவதற்கு அவளது வாலிபம் உயர உயரக் கையை நீட்டிக்கொண்டு நின்றது.

அந்தப் பெண்ணைக் கிளியோ சோகத்தோடு பார்த்து, ''என்னடி சொல்கிறாய் ஜூனோ?'' என்று தழு தழுத்த குரலில் கேட்டாள்.

''சார்மியானின் யோசனை எனக்குப் பிடிக்கவில்லை,'' என்று கண்டிப்பாக மொழிந்தாள் ஜூனோ என்ற அந்தச் சிற்றுடைச் சிங்காரி.

''ஜூனோ சின்னப் பெண். உலக அனுபவமில்லாதவள். என்னை நம்புங்கள்,'' என்றாள் சார்மியான்.

இறுதியில் ஜூனோ தோற்றாள்,

